# பகவத் பாதை




Bagavath Path

இது ஒரு பகவத் மிஷன் வெளியீடு

டிசம்பர் 2013


## ஈஸ்வர சிருஷ்டி - ஜீவ சிருஷ்டி

**- ஸ்ரீ பகவத்**



நமது மனதே மனதிற்கு முழு சுதந்திரம் வழங்கும்போது மனத்தின் மொத்த இயக்கமும் வேறு பரிமாணத்திற்கு வந்துவிடுகிறது. நமது மனோ இயக்கமே ஈஸ்வரனின் இயக்கமாகிவிடுகிறது.

- ஸ்ரீ பகவத்



வேத சாஸ்திரங்கள் இப்படிக் கூறுகின்றன.

"இது முன்னால் ஸத்மாத்திரமாகவே இருந்தது. அது பலவாக ஆவதற்கு யோசித்தது. தேஜஸ், அப்பு, அன்னம், அண்டஜம் முதலியவைகளை சிருஷ்டி செய்தது" - சாந்தோக்ய உபநிஷதம்.

"எப்படி நெருப்பிலிருந்து பொறிகள் உண்டாகின்றனவோ, அப்படியே அழியாத பிரம்மத்திலிருந்து பலவிதமான அறிவுள்ள வஸ்துகளும், ஜடமான வஸ்துகளும் உண்டாகின்றன" - முண்டகோபநிஷத்

ஈஸ்வரன் மாயையின் துணை கொண்டு இந்தப் பிரபஞ்சத்தைப் படைத்துள்ளான். இது ஈஸ்வர சிருஷ்டி.

நாம் மலையைப் பார்க்கிறோம்; கடலைப் பார்க்கிறோம்; மரங்களைப் பார்க்கிறோம்; மனிதர்களைப் பார்க்கிறோம்; மிருகங்களைப் பார்க்கிறோம்; பறவைகளைப் பார்க்கிறோம்; பல்வேறு உயிரினங்களைப் பார்க்கிறோம்.

- இவையெல்லாம் ஈஸ்வரனால் படைக்கப்பட்டவை. இறைவனால் சிருஷ்டிக்கப்பட்டவை.

- இதுதான் ஈஸ்வர சிருஷ்டி.

இவற்றை நாம் உருவாக்கவில்லை. இறைவன்தான் உருவாக்கி உள்ளான்.

ஜீவ சிருஷ்டி என்பது என்ன?

நாம் சிருஷ்டி செய்வதெல்லாம் ஜீவ சிருஷ்டி.

அப்படி நாம் எதனை சிருஷ்டி செய்துள்ளோம்?

இறைவன் படைத்த தானியங்களையும், தண்ணீரையும், நெருப்பையும், பயன்படுத்தி விதவிதமான உணவுகளைத் தயார் செய்கிறோம். இவையெல்லாம் நாமாக உருவாக்கியவை; நாமாக சிருஷ்டி செய்தவை. ஜீவர்களால் சிருஷ்டி செய்யப்பட்டவை.

இவற்றை ஜீவ சிருஷ்டி என்று கூறலாம்.

ஆனால் சாஸ்திரங்கள் சுட்டிக்காட்டும் ஜீவ சிருஷ்டி இதுவன்று.

சாஸ்திரங்கள் ஜீவசிருஷ்டி பற்றி வேறு விதமாகக் கூறுகின்றன.

அப்படி என்ன கூறப்படுகிறது?

உங்களையே எடுத்துக்கொள்வோம் உடலோடும், உயிரோடும் உள்ள நீங்கள் இறைவனால் படைக்கப்பட்டவர்.

உங்களை நான் எப்படிப் பார்க்கிறேன்? உங்களை எனது நண்பராகப் பார்க்கிறேன். உங்கள் மகன் உங்களைத் தந்தையாகப் பார்க்கிறான். உங்கள் தாய் உங்களை மகனாகப் பார்க்கிறாள்.

நீங்கள் எப்போதும் நீங்களாகவே இருக்கிறீர்கள். உங்களைப் பொறுத்து நீங்கள் எந்த மாற்றத்தையும் அடையவில்லை.

ஆனால் உங்களைப் பார்க்கும் ஒவ்வொருவரும் உங்களைத்
தங்களது மனதின் மூலமாக
விதம்விதமாகக் கற்பிதம் செய்து கொள்கிறார்கள்.

நீங்கள் ஒரே நபராக இருந்தாலும், ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு விதமாகத் தோன்றுகிறீர்கள்.

இவை உண்மையான மாற்றமல்ல. நீங்கள் வேறுவேறு நபராக, உங்களது அளவில் மாற்றமடையவில்லை.

ஆனால் உங்களைப் பார்க்கும் ஒவ்வொருவர் மனதிலும் ஒவ்வொரு விதமாகத் தோன்றுகின்றீர்கள்.

உண்மை ஒன்று; ஆனால் தோற்றங்கள் பல.

மனதின் மூலமாக உங்களை இவ்வாறு பலவிதமாக சிருஷ்டித்துக் கொள்கிறோம்.

இதுதான் ஜீவ சிருஷ்டி. சாஸ்திரங்கள் கூறும் ஜீவசிருஷ்டி.

நமக்கு ஏற்படும் பந்தம், அதிலிருந்து விடுபடும் மோட்சம் ஆகியவை இந்த ஜீவ சிருஷ்டியில் மட்டுமே உள்ளன.

ஈஸ்வர சிருஷ்டியில் பந்தமும் கிடையாது; முக்தியும் கிடையாது.

பிரச்சினைக்குரியது ஈஸ்வர சிருஷ்டி அல்ல.

நடக்கக்கூடிய நிகழ்ச்சிகள் அனைத்தும் உண்மையானவை. அவை அனைத்தும் ஈஸ்வர சிருஷ்டியே.

நமக்கு பசி ஏற்படுகிறது; உணவைச் சாப்பிடுகிறோம். தூக்கம் வருகிறது; படுக்கையில் படுத்து உறங்குகின்றோம்.

இத்தகைய செயல்கள் அனைத்தும் ஈஸ்வர சிருஷ்டியோடுதான் உள்ளன.

"தேவைக்கு அதிகமாக பசி ஏற்படுகிறதே!

தேவைக்கு அதிகமாக தூக்கம் வருகிறதே!"

– என நாம் நமது எதிர்பார்ப்புகளை அந்த நிகழ்வுகளோடு இணைத்தோமானால்

அந்த நிகழ்வுகளுக்கு மனோரீதியான அம்சத்தைக் கொடுத்துவிடுகிறோம்.

மனோரீதியான அம்சமாக்கும்போதுதான் அவை அனைத்தும் ஜீவ சிருஷ்டிகளாகின்றன.

ஆசை, குரோதம், மோகம், கோபம், பயம், துயரம் போன்ற உணர்ச்சிகள் இதனால் ஏற்படுகின்றன.

இதனால் நிகழ்வுகள் அனைத்தும் பிரச்சினைக்குரியதாகி விடுகின்றன.

நிகழ்ந்திடும் நிகழ்வுகளை

மனோரீதியான பிரச்சினைகளாக்காவிட்டால், நிகழ்ந்திடும் நிகழ்வுகள் பிரச்சினைகளே அல்ல.

நாம் அடையவேண்டிய தீர்வு, நிகழ்வுகளை மாற்றியமைப்பது அன்று.

ஜீவசிருஷ்டியான மன உணர்வுகளில் தான் தீர்வு தேவைப்படுகிறது. ஈஸ்வர சிருஷ்டியில் தீர்வு தேவைப்படவில்லை.

ஜீவ சிருஷ்டியினால் ஏற்படும் நம்முடைய மன உணர்வுகளில் எவ்வாறு தீர்வு காண்பது?

சாஸ்திரங்கள் என்ன தீர்வைக் கூறுகின்றன?

இதற்குத் தீர்வு காண்பதற்காக

ஜீவ சிருஷ்டியை சாஸ்திரங்கள் இரண்டுவிதமாகப் பிரிக்கின்றன.

சாஸ்திரங்களுக்கு ஆதரவான ஜீவ சிருஷ்டி, சாஸ்திரங்களுக்கு விரோதமான ஜீவ சிருஷ்டி என

அவை இரண்டாகப் பிரிக்கப்படுகின்றன.

சாஸ்திரங்கள் அனைத்தையும் அறிவுப் பூர்வமாகக் கற்று, அதையே நன்றாக ஆய்வு செய்து

அறியவேண்டிய தத்துவ உண்மைகளை அறிவதுதான்

சாஸ்திரங்களுக்கு ஆதரவான ஜீவ சிருஷ்டி.

அறியவேண்டியவைகளையெல்லாம் அறிவதன் மூலம்

ஜீவ சிருஷ்டியினால் ஏற்படும் கட்டுக்களிலிருந்து – பந்தங்களிலிருந்து – விடுபட்டு ஜீவன் முக்தனாகின்றோம்.

ஜீவ சிருஷ்டியை உருவாக்கும் நமது மனதை இப்படி நல்ல விதமாகப் பயன்படுத்துவதால்

கேடு விளைவித்து வந்த ஜீவ சிருஷ்டி சீரமைக்கப்படுகிறது.

ஜீவ சிருஷ்டியின் இரண்டாவது பிரிவுதான், சாஸ்திரங்களுக்கு விரோதமான ஜீவ சிருஷ்டி

நமக்கு ஏற்படும் ஆசை, கோபம், காமம், பயம், துயரம் போன்ற உணர்ச்சிகளும்

அவற்றுக்கு காரணமான சிந்தனைகளுந்தான்

சாஸ்திரங்களுக்கு எதிரான ஜீவ சிருஷ்டிகளாகும்.

இப்போது நாம் என்ன செய்யவேண்டும்?

எதைச் சாதிக்கவேண்டும்?

எதை நாம் அடைய வேண்டும்?

பிரச்சினைகள் அனைத்தும் மனோரீதியானவை என்பதை நம்மால் புரிந்து கொள்ள முடிகிறது. சாஸ்திரங்களும் அதனையே சுட்டிக்காட்டுகின்றன.

நமது மனோரீதியான உணர்ச்சிகள் எப்போதும் பிரச்சினைகளையே உருவாக்குகின்றன.

ஒரு சராசரி மனிதன் ஆன்மிகத்தில் அக்கறை இல்லாதவனாகக்கூட இருக்கலாம்.

ஆனால் அவனும் மனோசாந்தியையே விரும்புகிறான்.

அவனைப் போன்றவர்கள் தங்களைப் புரிந்து கொள்வதில் ஆர்வம் காட்டாமல்

போகங்களின் மூலம் – இன்ப நுகர்ச்சிகளின் மூலம் – தங்களை அமைதிப்படுத்த முயல்கிறார்கள்.

தங்களைப் புரிந்துகொண்டு தங்களைச் சீரமைப்பதில் அக்கறை கொண்டவர்களே

ஆன்மிக ஆய்வுக்கு வருகிறார்கள்.

ஆன்மிக ஆய்வுக்கு வந்த நாம் நமது பிரச்சினைகளை எவ்வாறு எதிர்கொள்வது?

நமது மனோ உணர்ச்சிகளை எவ்வாறு எதிர்கொள்வது?

நாமாக உருவாக்கிய ஜீவ சிருஷ்டியை எவ்வாறு எதிர்கொள்வது?

நாம் பெயரை மட்டும் மாற்றிக்கொண்டால் போதும்.

பெயரை மாற்றிக் கொண்டாலே நாம் எதிர்பார்க்கும் தீர்வுகள் அத்தனையும் கிடைத்துவிடும்.

அதென்ன பெயர் மாற்றம்?

எந்தப் பெயரை மாற்ற வேண்டும்?

ஒரேயொரு சிறிய மாற்றம் போதும்.

அதாவது –

எவற்றையெல்லாம் சாஸ்திரங்கள் ஈஸ்வர சிருஷ்டியென்று கூறுகின்றனவோ

அவற்றையெல்லாம் ஜீவ சிருஷ்டியாக எடுத்துக் கொள்ளவேண்டும்.

எவற்றையெல்லாம் சாஸ்திரங்கள் ஜீவ சிருஷ்டியென்று கூறுகின்றனவோ

அவற்றையெல்லாம் ஈஸ்வர சிருஷ்டியென்று எடுத்துக் கொள்ளவேண்டும்.

அப்படியென்றால்?

சாஸ்திரங்கள் கூறும் ஜீவ சிருஷ்டி என்பது – அதாவது நமது மனது – எவ்வாறு செயல்படுகிறது என்பதைப் புரிந்து கொள்வது இங்கு உதவியாக இருக்கும்.

நமக்கு எத்தனையோ உணர்ச்சிகள் – கோபம், ஆசை, பயம், துக்கம் – போன்றவை ஏற்படுகின்றன.

இவை எப்படி ஏற்படுகின்றன?

ஒரு குறிப்பிட்ட சூழ்நிலையை நாம் சந்திக்கும்போது

நமது மன இயல்புக்கு ஏற்ற மன உணர்ச்சிகள் யாவும்

தாமாக வெளிப்படுகின்றன.

நாமாக முயற்சி செய்து எவற்றையும் கொண்டுவரமுடியாது. எந்த உணர்ச்சிகளையும் நாமாக உருவாக்க முடியாது.

அப்படித் தாமாக உருவான அந்த உணர்ச்சிகளும்

தாமாகவே, வினாடிக்கும் குறைவான நேரத்தில் மறைந்துவிடுகின்றன.

அவற்றைச் சீரமைக்கும் எண்ணத்தில் நாம் எதையாவது செய்தோமானால்

அதனால்தான் அந்த உணர்ச்சிகள் யாவும் புதுப்பிக்கப்பட்டுவிடுகின்றன.

அங்கு நமக்கு எந்த வேலையுமே கிடையாது என்பதைப் புரிந்து கொள்வது மட்டுமே

நாம் புரிந்து கொள்ள வேண்டியது.

நம்முடைய Conscious முயற்சியின் காரணமாக நாம் எதைச் செய்தாலும்

அது நம்முடைய செயலாகும்.

அது மட்டுமே நாமாகச் செய்யும் செயலாகும்.

நம்முடைய மன உணர்ச்சிகளைப் பொறுத்த அளவில்

எதனைச் செய்வதற்கும்

நமக்கு உரிமையோ, கடமையோ கிடையாது.

மனோரீதியாக எந்தச் செயல் நடந்தாலும் சரி,

அது ஈஸ்வரன் செயலே – அது ஈஸ்வர சிருஷ்டியே

– எனக் கருதுவது மட்டுமே தேவை.

ஆனால் வெளியே நடக்கும் நிகழ்வுகளில் நாம் எதையாவது செய்து கொள்ளலாம்;

– எதையாவது மாற்றியமைத்துக் கொள்ளலாம்.

நமக்கு நோய் ஏற்படுகிறது என்றால், " இது ஈஸ்வர சிருஷ்டி" என்று அப்படியே ஏற்றுக்கொள்ளத் தேவையில்லை.

அங்கு நம்முடைய செயலுக்கு வாய்ப்பு உள்ளது.

அங்கு தேவையான சிகிச்சைகளை நாம் மேற்கொள்ளலாம்.

புறநிகழ்வுகள் அனைத்தையும் ஜீவ சிருஷ்டியாக எடுத்துக் கொள்ளவேண்டும்.

இதைத்தான்

சாஸ்திரங்களுக்கு உடன்பாடான ஜீவ சிருஷ்டி என்றும்

சாஸ்திரங்களுக்கு விரோதமான ஜீவ சிருஷ்டி என்றும்

இரண்டு வகையாகப் பிரித்துக்கொள்ள வேண்டும்.

நாம் ஈடுபடும் புறச் செயல்களில் தர்ம நியாயங்களை அனுசரித்து ஈடுபடுவோமானால்

நமது செயல்கள் யாவும்

சாஸ்திரங்களுக்கு உடன்பட்ட ஜீவ சிருஷ்டி ஆகும்.

தர்ம நியாயங்களைப் புறக்கணித்து நாம் செயல்படுவோமானால்

நமது செயல்கள் யாவும்

சாஸ்திரங்களுக்கு விரோதமான ஜீவ சிருஷ்டி ஆகும்.

மனோ ரீதியான செயல்களைப் பொறுத்த அளவில்

நாம் செய்வதற்கு எதுவுமே கிடையாது.

அவை எவையும் நமது செயல் எல்லைக்கு (Jurisdiction) – உட்பட்டவையல்ல

நமது மனோ இயக்கம் என்பது ஒரு பைத்தியக்காரத் தனமான இயக்கம்.

எப்படி இயங்கினாலும், அது பைத்தியக்காரத்தனமான இயக்கமே.

அதில் சரியான பைத்தியம், சரியற்ற பைத்தியம் என்ற பேதம் எதுவும் கிடையாது.

பைத்தியத்துக்கு அறிவுரை வழங்குவதும் ஒரு பைத்தியக்காரத் தனமான முயற்சியே.

மனோரீதியான செயல்கள்

தாமாக ஏற்பட்டாலும் சரி,

நமது பங்களிப்பால் ஏற்பட்டாலும் சரி

– அவை அனைத்தும் தாமாக ஏற்படுவதாகவும்

அவையே ஈஸ்வர சிருஷ்டி எனவும்

நாம் புரிந்து கொள்ளும் போது

நமது மனோ இயக்கத்திற்கு முழுச்சுதந்திரம் வழங்குகின்றோம்.

– மனதே மனதுக்கு சுதந்திரம் வழங்குகின்றது.

அந்தச் சுதந்திரத்தில்

மனதின் மொத்த இயக்கமுமே வேறு பரிமாணத்துக்கு வந்துவிடுகின்றது.

நம்முடைய மனோ இயக்கமே ஈஸ்வரனின் இயக்கமாகி விடுகின்றது.

குறிப்பு :

இந்தக் கட்டுரை சுருக்கி எழுதப்பட்டதால் இரண்டுமுறை படித்துப் புரிந்து கொள்ளவும்.



# சென்னை ஸ்ரீ பகவத் மிஷனின் புதிய அரங்கத் திறப்பு விழா

ஸ்ரீ பகவத் மிஷனின் சென்னை மையம் செயல்படும் திரு. சுகுமார் சீனிவாசன் - லில்லி தம்பதியினரின் இல்லத்தில் ஒரு புதிய வளாகம் கட்டப்பட்டுள்ளது. இனி முதற்கொண்டு சென்னை மையம் நடத்தும் கூட்டங்கள், ஞான முகாம்கள் மற்றும் சென்னை மையத்தின் அனைத்து நிகழ்வுகளும் இந்த வளாகத்தில் நடைபெற உள்ளது. புதிய அரங்கத் திறப்பு விழா 17-11-2013 ஞாயிறு அன்று காலை மிகச் சிறப்பாக நடைபெற்றது.

அந்த இனிய காலை வேளையில் குளிர்ந்த காற்றுடன் வானம் தூறல் தூவி அனைவரையும் விழாவிற்கு வருக ... வருக .... என வரவேற்றது.

சரியாக காலை 10-30 மணி அளவில் பகவத் ஐயாவின் குரு தேனி சுவாமிகள் தம் பொற்கரங்களால் அரங்கத்தைத் திறந்து வைத்து வாழ்த்துரை வழங்கினார்கள். பிறகு தேனி சுவாமிகள் மற்றும் பகவத் ஐயா முன்னிலையில் "ஞானம் மிகவும் எளிது" என்ற பாடலுடன் கூடிய நாட்டிய நிகழ்ச்சி மிகவும் சிறப்பாக நடைபெற்றது. இந்த வித்தியாசமான நிகழ்ச்சி காண்பவர்கள் அனைவரது மனதையும் கண்களையும் கவரும் விதமாக அமைந்திருந்தது. மதியம் அனைவருக்கும் அறுசுவை உணவு பரிமாறப்பட்டது.

இந்நிகழ்ச்சிக்கு முத்தாய்ப்பாக பகவத் ஐயாவின் உரை அமைந்திருந்தது. அதில் பகவத் மிஷனின் செயல்பாடுகளைப் பற்றி குறிப்பிடும் போது, "இது பயிற்சி கொடுக்கும் ஒரு அமைப்போ அல்லது Institution-னோ அல்ல. இது ஆன்மிகத்தின் உயர்ந்த நிலையான ஞானத்தை அனைவருக்கும் கொண்டு சேர்க்கும் Post Office சேவையை போன்றதே" எனக் கூறினார். இது ஐயாவின் புதிய அணுகுமுறையால் ஞானம் எளிமையாக்கப்பட்டதை வெளிப்படுத்தும் விதமாக அமைந்தது. பல ஆன்மிக அமைப்புகள் ஞானத்தை பிரமாண்டப்படுத்தி சாதகர்களை தடுமாற வைத்திருக்கும் இச்சூழலில் பகவத் ஐயா அவர்கள் அந்த பிரமாண்டத்தையே எளிமையாக்கி அனைவரும் எளிதாக புரிந்துகொள்ளும் வகையில் வழங்கியிருக்கிறார்கள். இதை அனைவருக்கும் கொண்டு சேர்க்கும் Post Office சேவையாக பகவத் மிஷன் செயல்பட்டுக் கொண்டிருக்கிறது.

அந்த வகையில் சென்னை பகவத் மிஷன் செயல்பட சுமார் 150 பேர் அமரும் வகையில் எல்லா வசதிகளுடன் இடமும் வழங்கி சிறந்த தொண்டும் ஆற்றும் திரு. சுகுமார் சீனிவாசன் - லில்லி தம்பதியினர்களின் செயல்பாடு மிக உன்னதமானதாகும். இவர்களுடன் இணைந்து செயல்படும் திருவாளர்கள். சரவணன், புலியூர் உடையான், சம்பந்தம், தியாகராஜன், ஓஷோ ராஜேந்திரன், திரு. மாதவன் பாபு, விபாகரன், சிவப்பிரகாசம், ரவிச்சந்திரன் தம்பதிகள், கணேசன், சிட்டிபாபு, தரணி, சந்திரசேகர் மற்றும் அனைவருக்கும் ஸ்ரீ பகவத் மிஷன் சார்பிலும் பயனடைந்தவர்கள் சார்பிலும் நன்றியை தெரிவித்துக் கொள்கிறோம்.

இது போல் புரிந்துகொண்ட அனைவரும் ஒன்றிணைந்து சிறப்பாக தொண்டாற்ற அனைவரையும் அழைக்கும்....

ஸ்ரீ பகவத் மிஷன்

## ஐயாவுடைய நிகழ்ச்சி நிரல்

| நாள் | நிகழ்ச்சி நடைபெறும் இடம் | பொருள் | நிகழ்ச்சி ஒருங்கிணைப்பாளர் |
|---|---|---|---|
| 22-12-2013 ஞாயிறு | ஸ்ரீ பகவத் மிஷன் சென்னை மையம், அம்பத்தூர், சென்னை. | **"தன்னை அறியும் ஞானம்"** மாலை 5-00 to 8-00 மணி வரை | ஸ்ரீ பகவத் மிஷன் சென்னை மையம், அம்பத்தூர். செல் : 98840-97438, 99520-71525 |
| 29-12-2013 ஞாயிறு | சங்கரன் மஹால், கருக்குப்பேட்டை, செங்கல்பட்டு to காஞ்சிபுரம் மெயின்ரோடு, காஞ்சிபுரம். | **"தன்னை அறியும் ஞானம்"** மாலை 4-00 to 8-00 மணி வரை | ஸ்ரீ பகவத் மிஷன் சென்னை மையம், ஐயம்பேட்டை மனவளக்கலை மன்ற அறக்கட்டளை, பேரா.**புகழேந்தி,** செல்: 9095689649 குருஜீ அ/நி. **நாகேஸ்வரன்,** பேராசிரியர் செல் : 99441 42267 |

### திருவண்ணாமலையில் சத்சங்கம்

நாள் : 19-1-2014 முதல் 15-3-2014 வரை (15, 16 பிப்ரவரி 2014 தவிர) தினசரி காலை 10 மணி முதல் 12-30 வரை
இடம் : திருவண்ணாமலை. செல் : 9994205880, 9789165555

### திருச்செந்தூர்

நாள் : 01-1-2014 முதல் 16-1-2014 வரை
இடம் : ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள் திருச்செந்தூரில் தமது இல்லத்தில் தங்கியிருக்கிறார்கள்.
சந்திக்க விரும்புகிறவர்கள் 9944215677 என்ற எண்ணில் முன் அனுமதி பெற்று சந்திக்கலாம்

## ?கேள்வி பதில்

கேள்வி : பகவத் ஐயாவின் மூலம் மனதின் இயக்கத்தைப் புரிந்து கொண்டபிறகு நான் தர்ம நியாயங்களுக்கு உட்பட்டு பெரும்பாலும் நல்ல செயல்களையே செய்து வருகிறேன். இப்படி நான் செய்யும் செயல்களை என்னுடைய குடும்ப உறுப்பினர்கள், நண்பர்கள் என மற்றவர்கள் செய்யும் கேலி, கிண்டல், விமர்சனம் போன்றவற்றை நான் எவ்வாறு எதிர்கொள்வது? இந்தச் சூழ்நிலைகளில் சரியான முறையில் நான் எப்படி நடந்துகொள்வது? விளக்கம் தேவை.

பதில் : மனதின் அகம், புறம் செயல்பாடுகளைத் தெளிவாகப் புரிந்துகொண்டு செயல்படுவதன் மூலம் மேற்சொன்ன சூழ்நிலையை நாம் சரியாக எதிர்கொள்ள முடியும்.

மனதின் அக இயக்கத்திற்கு எதிராக நம்மால் எதுவுமே செய்யமுடியாது என்ற மனதின் இயலாமையை நாம் புரிந்துகொள்வது மட்டுமே அகத்தைப் புரிந்துகொண்டதாகும். அதாவது மனதில் எப்பேற்பட்ட துன்பம், துயரம் ஏற்பட்டாலும் சரி, அதை நம்மால் ஒன்றுமே செய்யமுடியாது என்று புரிந்துகொண்டு, அங்கு நாம் செய்வதற்கு எந்த ஒரு செயலும் இல்லை என்று முடித்துக்கொண்டு இருப்பதே "சும்மா இருப்பது" ஆகும். இதுவே அகத்தைப் பற்றிய முழுமையான புரிதல் ஆகும்.

புறத்தைப் பொறுத்தவரையில் நாம் இங்கு இரண்டு விசியத்தை நன்றாகப் புரிந்துகொள்ள வேண்டும். ஒன்று நாம் மற்றவர்களிடம் நடந்துகொள்வது. மற்றொன்று மற்றவர்கள் நம்மிடம் நடந்துகொள்வது. இதில் நாம் மற்றவர்களிடம் எப்படி நடந்துகொள்வது என்பதில், மற்றவர்களைக் காட்டிலும் மனதின் இயக்கத்தைப் புரிந்து கொண்ட நாம் தான் மற்றவர்களின் இயல்பு, மனப்பதிவு, அனுபவங்களை ஏற்றுக்கொண்டு சிறப்பாகச் செயல்பட வேண்டும். நம்முடைய புரிதல் அவர்கள் எவருக்கும் தேவையில்லை. அதைப் பற்றிய அவசியமும் அவர்களுக்கு இல்லை. அவர்களின் தேவைகளை நாம் பூர்த்தி செய்வதையே அவர்கள் விரும்புகிறார்கள். ஒருபோதும் நம்முடைய புரிதலை விரும்பவில்லை. ஆதலால் அவர்களின் தேவையை அறிந்து முடிந்தவரை அவர்களை அனுசரித்து, அங்கீகரித்து செயல்படுவது மட்டுமே சிறப்பான செயலாக அமையும். மற்றவர்கள் நம்மிடம் சுதந்திரமாகச் செயல்பட அனுமதிப்பதே நாம் அவர்கள் மீது கொண்டுள்ள உண்மையான அன்பின் வெளிப்பாடு ஆகும். இப்படி நம்மிடம் சுதந்திரமாகச் செயல்பட அனுமதிப்பது மட்டுமே அவர்களின் பெரும்பாலான தேவைகள் மற்றும் நிறை, குறைகளைப் பகிர்ந்துகொள்ளக் கூடிய முக்கிய நபராக நாம் இருப்பதற்கான வாய்ப்பாக அமையும். நாம் இப்படி நடந்து கொள்வதையே அவர்கள் உண்மையில் விரும்புகிறார்கள்.

மற்றவர்கள் நம்மிடம் நடந்துகொள்வது என்பது கிட்டத்தட்ட அக இயக்கத்தைப் போன்றதே. அவர்கள் செயல்படுவது நமது கட்டுப்பாட்டில் இல்லை. எங்கே, எப்போது, எப்படி நடந்து கொள்வார்கள் என்பது நமக்கு தெரியாது. அடுத்ததாக அவர்கள் இப்படித்தான் நடந்துக்கொள்வார்கள் என்றும் நம்மால் கூறமுடியாது. அதனால் இங்கே அவர்களை முழுமையாகச் செயல்பட அனுமதித்து, அவர்களை முழுவதுமாகக் கவனித்து வருவது மட்டுமே நாம் அவர்களிடம் சிறப்பாகச் செயல்படுவதற்கான வாய்ப்பாக அமையும்.

இதனால் நாம் மற்றவர்களிடம் சரியானபடி நடந்துகொள்வது ஒன்று மட்டுமே நமக்குக் கொடுக்கப்பட்ட சரியான வாய்ப்பு ஆகும். அதனால் நாம் முடிந்தவரை மற்றவர்களை அனுசரித்தும், அங்கீகரித்தும் செயல்பட வேண்டும். இதற்கு மேலும் அவர்கள் நமது செயலில் கூறும் குறைகளை நாம் கண்டுக்கொள்ளத் தேவையில்லை. நம்முடைய தெளிவு நமக்குத் தெரிந்தால் போதும், நம்முடைய செயல் நமக்கு நியாயமானதாக இருந்தால் போதும். நம்முடைய அகத்தெளிவையோ, நியாயமான செயலையோ மற்றவர்களிடம் நிரூபித்துக்காட்ட வேண்டிய அவசியமில்லை. நம்முடைய நேர்மை நமக்குத் தெரிந்தால் போதும்.

உதாரணமாக மகாத்மா காந்தி தனது வயதான காலத்தில் சபர்மதி ஆசிரமத்தில் இரண்டு இளம் பெண்களின் தோள்மீது கைபோட்டு நடந்து செல்வார். இக்காட்சியைக் கண்ட பலர் காந்திஜியைத் தவறாக விமர்சனம் செய்தார்கள். இதைக் கேள்விப்பட்ட காந்தி மனம் வருந்தினார்.

"என் மனதில் எந்தவிதமான களங்கமுமின்றி, எனது பேத்தி வயதுள்ள இந்தப் பெண்களின் துணையுடன் நான் நடந்து செல்வதை இவர்கள் இப்படிக் கேலி செய்கிறார்கள்" என்று காந்திஜி கலங்கினார். தனது வருத்தத்தை இராஜாஜிக்கு கடிதமாக எழுதினார்.

காந்தியின் கடிதத்தைப் படித்த இராஜாஜி அதற்கு "மகாத்மா காந்திக்கு .... தங்கள் கண்ணியத்தைப் பற்றியும் நேர்மையைப் பற்றியும் மற்றவர்களைவிட, தங்களுக்கே நன்றாகத் தெரியும். மற்றவர்களின் தவறான விமர்சனத்தைக் கண்டு நீங்கள் கவலைப்படத் தேவையில்லை.

ஒருவேளை நீங்கள், அந்த விமர்சனத்திற்கு மதிப்பு கொடுத்து வருந்தினால் அவர்கள் சொல்வது உண்மை என்றாகிவிடும். எனவே அடுத்தவர்களின் தவறான விமர்சனத்தை ஒரு பொருட்டாகக் கொள்ளாதீர்கள்" என்று பதில் எழுதினார். அன்றிலிருந்து காந்திஜி மற்றவர்களின் தவறான விமர்சனத்தைக் கண்டுகொள்வதில்லை.

நமது செயல்களைக் கண்டு மற்றவர்கள் செய்யும் கேலி, கிண்டல்களைக் கண்டு நாம் வருத்தப்படத் தொடங்கினால் நாம் ஒருபோதும் நிம்மதியாக வாழமுடியாது என்பதை காந்திஜியின் வாழ்வில் நிகழ்ந்த இந்தச் சம்பவம் நமக்கு உணர்த்துகிறது.

மேலும் முக்திக்காக வாழ்க்கையில் எல்லாவற்றையும் உதறிய பட்டினத்தார் வாழ்வில் நடந்த சம்பவத்தையும் நாம் தெரிந்து கொள்வோம். பட்டினத்தார் தனது ஞானக்குழந்தையின் மூலம் "காதற்ற ஊசியும் வாராது காண் கடைவழிக்கே" என்ற மகத்தான வார்த்தையின் மூலம் சொத்துகள், சொந்தங்கள் என அனைத்தையும் உதறிவிட்டு ஆண்டியாகி முக்தியை நாடினார்.

தனது வயதான காலத்தில் ஓர் ஊர் வழியாக செல்லும்போது உடல் மிகவும் களைப்பாக இருந்தமையால் ஒரு விவசாய நிலத்தின் வரப்பின் மீது தலை வைத்து கண் அயர்ந்தார். அப்போது அவ்வழியாக தண்ணீர் எடுக்க சென்ற இரண்டு பெண்களில் ஒருத்தி "ஐயோ பாவம்! முற்றும் துறந்த ஞானி இப்படி வயல் வரப்பில் படுத்துக்கிடக்கிறாரே" என்றாள். அதற்கு மற்றொருவள், "இவர் இன்னும் தலைக்கு தலையணை சுகத்தையே துறக்கமுடியவில்லையே; இவர் எப்படி ஞானியாக இருக்கமுடியும்?" என்று கூறிச்சென்றாள்.

பட்டினத்தாருக்கு அவர்கள் பேசியது காதில் விழுந்தது. உடனே வரப்பிலிருந்து தலையை எடுத்து நிலத்திலே முழுவதுமாக படுத்துக்கொண்டார். தண்ணீர் எடுத்துக் கொண்டு திரும்பிய அதே இரண்டு பெண்கள், இவரைப் பார்த்து ஒருத்தி "ஏய் நாம் பேசியதை இந்த ஞானி கேட்டு இருப்பார் போல் தெரிகிறது. அதனால் தான் தலையை வரப்பிலிருந்து எடுத்து நிலத்தில் படுத்துக்கொண்டார்" என்றாள். அதற்கு மற்றொருவள், "போவோர், வருவோர் எல்லாம் என்ன என்ன பேசுகிறார்கள் என்று கேட்பவர் எப்படி ஞானியாக இருக்க முடியும்?" என்று கூறிச்சென்றாள்.

அதன் பிறகு கண்விழித்த பட்டினத்தார் நான் பக்குவப்பட இன்னும் எத்தனை காலம் வேண்டுமோ என புலம்பினார். பிறகு சில காலத்தில் முக்தியடைந்தார்.

நாட்டுக்காக தன்னையே அர்ப்பணித்து வாழ்ந்த மகாத்மா காந்தியையும், முக்திக்காக எல்லாவற்றையும் உதறிய பட்டினத்தாரையும், மற்றவர்கள் குறை கூறத்தான் செய்தார்கள். அதனால் யார் என்ன கூறினாலும் நமது செயல் நமக்கு சரியானதாகவும், நேர்மையாகவும், தர்ம நியாயத்திற்கு உட்பட்டதாகவும் இருக்கும் பட்சத்தில் நாம் நமது சரியான செயல்களை சிறப்பாக தொடர்ந்து செய்யவேண்டியது மட்டுமே நமது கடமையாக இருக்கவேண்டும்.

"நமது தெளிவும், நேர்மையான செயலும் நமக்குத் தெரிந்தால் போதும்; மற்றவர்களிடம் நிரூபிக்க வேண்டியது அவசியமில்லை".

V.A.P. சரவணன், சேலம்
செல் : 99942-05880

# பாதையில் மலர்ந்த மலர்கள்
## எனது அனுபவம் ....

இருபத்தியேழு ஆண்டுகளாக மனவளக்கலை ஆசிரியராக செயல்பட்டுக் கொண்டு இருக்கிறேன். எமது குருபிரான் அவர்களிடம் பூரண ஈடுபாடு ஏற்பட்ட பின்னும் கூட, வேறு மார்க்கங்களைப் பற்றித் தெரிந்து கொள்வதையோ, வேறு நிகழ்வுகளில் பங்கேற்பதையோ, நான் தவறாகக் கருதுவதில்லை. குறிப்பாக, ஓஷோவின் கருத்துகளால் பெரிதும் ஈர்க்கப் பெற்று உள்ளேன். பேரானந்தத்தைப் பற்றி அவர் சொல்வது மிகவும் பிடிக்கும். ‘எப்போதும் சந்தோஷம்’ என்ற நிலையை ஓரளவில் எய்தி இருந்தேன். ஆனால், அதில் பெரிய அளவில் முன்னேற்றம் நிகழவில்லை.

ஜனவரி 2011 தமிழ்ப் பல்கலைக் கழகத்தில் எனது முனைவர் பட்ட ஆய்வைத் தொடங்கினேன். ‘விழிப்பு நிலைக்கு முயற்சி செய்தால், எப்போதும் சந்தோஷம் என்ற நிலையை எய்த இயலும்’ என்பதையே எனது கருதுகோளாக இருத்தி ஆய்வைத் தொடர்ந்தேன். நாட்கள் செல்லச் செல்ல, எனது கருத்து வலுவிழப்பதாக உணர்ந்தேன். எனக்கு ஏற்பட்டுக் கொண்டிருந்த சந்தோஷம் கூடத் தன் அளவில் குறைவு படுவதைப் புரிந்து கொண்டேன்.

ஆனந்த நிலை என்பது, அமைதியை அடிப்படையாகக் கொண்டதே என்பது இலேசாகப் புலப்படத் தொடங்கியது. ஆனால் இக் கருத்தில் அவ்வளவு தெளிவு இல்லாமல் இருந்தது. அவ்வப்போது உண்டாகும் மன நிலை எதுவோ, அதை ஏற்றுக் கொள்வதே சரி என்று தோன்றியது. ஆனால், இக்கருத்தை வலியுறுத்தி தைரியம் சொல்ல யாரும் இல்லாதது போல் உணர்ந்தேன்.

அந்த நேரத்தில்தான், பகவத் பாதை இதழ் நான் கேட்காமலேயே எனக்கு வரத் தொடங்கியது. புதிய வெளிச்சம் என்னுள் பாய்வதாக உணர்ந்தேன். முனைவர் பட்ட ஆய்வை முடிக்கும் இத்தருவாயில், எனது கருதுகோள் மாறிவிட்டது. "இன்பமோ, துன்பமோ, அந்தந்த நேர உணர்வுகளை நகர்ந்து செல்ல அனுமதித்து விடுவதே புனிதமான அமைதி’ என்பதைப் புரிந்து கொண்டேன். இதில் ஒரு வேடிக்கை நிகழ்வது புரிந்தது. "இன்பத்தைக் குறித்த வேட்பே, அமைதித் தன்மைக்குக் குந்தகம் ஏற்படுத்தி விடுகிறது" என்று நமது ஐயா அவர்கள் புத்தகத்தில் கோடிட்டுக் காட்டி இருப்பதற்கிணங்க, நான் என்னுள் இன்ப வேட்பை விட விட மென்மையான ஒரு நிம்மதி நிகழ்வது புரிந்தது.

ஆனால், சில நேரங்களில் எனக்கு ஆச்சரியமாகவும், நம்ப முடியாததாகவும் இருக்கும். நம் காலத்தில் வாழும், பார்ப்பதற்கு மிக எளிமையாக இருக்கும் ஒருவரா இவ்வளவு பொக்கிஷம் போன்ற தத்துவத்தைக் கொடுக்கிறார் என்று தோன்றும். ஒரு வேளை சில பந்தாக்கள் செய்து கொண்டு கொடுத்தால், சிலருக்கு இன்னும் ஏற்புடையதாக நினைக்கத் தோன்றுமோ என்று கூட எனக்கொரு எண்ணம் உதிப்பதுண்டு!!

வாழ்க வளமுடன்.

அன்புடன்
மனவளக்கலை ஆசிரியர்
K.B. கிருஷ்ணமூர்த்தி, கும்பகோணம்

## ஆசிரியர் பகுதி

அனைவருக்கும் இந்த சக பயணியின் வணக்கம்.

நமது பகவத் ஐயா அவர்களுடன் ஞானமுகாம், நெரூர் சதாசிவ பிரமேந்திரர் ஆஸ்ரமத்தில் 29-11-2013 முதல் 01-12-2013 வரை மிகச் சிறப்பாக நடைபெற்றது. தமிழகத்தின் பல்வேறு ஊர்களிலிருந்தும் சுமார் 150 அன்பர்கள் கலந்து பயனடைந்தனர்.

ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள், ஞான நிலை, அகம் - புறம், நான் யார், Understanding & Confirmation போன்ற தலைப்புகளில் சிறப்புரை நிகழ்த்தி அதில் எழும் வினாக்களுக்கும் விளக்கங்கள் கொடுத்து தெளிவை ஏற்படுத்தினார். இதில் கலந்துகொண்ட அனைவரும் தெளிவடைந்து நெகிழ்ச்சியுடன் திரும்பிச் சென்றனர்.

இந்த ஞானமுகாமை சிறப்பாக ஏற்பாடு செய்து அனைவருக்கும் நல்ல தங்கும் இட வசதியையும், சுவையான உணவையும் வழங்கி தொண்டாற்றிய நமது ஸ்ரீ பகவத் மிஷன் பரமத்தி வேலூர் அன்பர்கள் திரு. ராஜகோபால், திரு. மோகன், Dr. சுவாமிநாதன், திரு.பாலசுப்ரமணியம், திரு. சௌந்தர்ராஜன் ஆகியோருக்கும் மேலும் இந்த ஞானமுகாம் சிறப்பாக நடைபெற உதவிய நெரூர் ஸ்ரீ கைலாஷ் ஆஸ்ரம மடாதிபதி ஸ்ரீமத் சிதாபானந்த சுவாமிகள், துறையூர் ஸ்ரீமத் ஸ்வரூபானந்த சுவாமிகள், நாகப்பட்டணம் திரு. முத்துச்செல்வன் மற்றும் அவர்கள் நண்பர்களுக்கும் நமது அனைவரின் சார்பிலும் நன்றியை தெரிவித்துக்கொள்வோம்.

இதுவரை நாம் பகவத் ஐயாவின் பல நூல்களைப் படித்திருந்தாலும் அவரோடு ஞான முகாமில் கலந்துகொண்டு நமது தனிப்பட்ட சந்தேகங்களுக்கும் விளக்கம் பெற்று தெளிவு பெற்றது பயனுள்ள அனுபவமாய் இருந்தது.

பல ஊர்களிலிருந்து வந்திருந்து ஒருவருக்கு ஒருவர் அறிமுகம் செய்து கொள்வதோடு புரிதலையும் பகிர்ந்து கொண்டனர். இது ஒரு குடும்ப நிகழ்ச்சிபோல் காட்சி அளித்தது.

இன்னும் இதுபோன்ற பல ஞான முகாம்களை நிகழ்த்தி எளிமையான இந்த ஞானத்தெளிவை பகிர்ந்துகொள்ள அனைவரும் முயற்சி எடுப்போமாக.

அன்புடன்,
**K.S. ஜீவமணி, ஆசிரியர்,**
செல் : 97891-65555

## சேலம் ஞான முகாமின் Audio CD




சேலம் திருவருட்சோலையில் 15-8-2013 முதல் 19-8-2013 வரை நடைபெற்ற ஞானமுகாமின் Audio CD தற்போது சிறப்பாக வெளியாகியுள்ளது.

ஸ்ரீ பகவத் ஐயாவின் ஞான உரையுடன் அவருடன் நடந்த உரையாடல்கள் மற்றும் கேள்வி - பதில்கள் என அனைத்தும் உள்ளடங்கியதாகவும் முழுமையான தெளிவைத் தரக்கூடியதாகவும் அமைந்துள்ளது.

ஐந்து நாள் நிகழ்ச்சியும் சேர்ந்து 11-00 மணி நேர ஒரே CD யாக அமைந்துள்ளது. அனைவரும் பெற்று பயனடையுமாறு கேட்டுக்கொள்கிறோம்.

**விலை ரூ. 100/- மட்டுமே**

பிரவாகம் பப்ளிகேஷன்,
சேலம்.
செல் : 9994206880,
9789165555.

## ஐயாவின் ஞான உரைகள் (Audio Talk)

ஐயாவின் புதிய, புதிய ஞான உரைகளைத் தற்போது www.sribagavath.org என்ற இணையத்தில் Gallery Folder -ல் இருந்து இலவசமாகக் கேட்பதற்கும் (Listen) பதிவிறக்கம் (Download) செய்வதற்கும் வசதிகள் செய்யப்பட்டுள்ளன.

இந்தத் தகவலை உங்கள் ஆன்மிக நண்பர்களுக்கும் தெரியப்படுத்தி நீங்களும் பயனடையும்படி அன்புடன் கேட்டுக்கொள்கிறோம்.

ஸ்ரீ பகவத் மிஷன்

## ஜென்கதை
## "சுய ஒளி"

புகழ்பெற்ற ஒரு மடாலயத்தில் குரு ஒருவர் இருந்தார். அவருக்குச் சீடர்களாக பல துறவிகள் அங்கிருந்தார்கள். ஒரு சமயத்தில் குரு இறக்கும் தருவாயில் படுக்கையில் படுத்திருந்தார். அவருக்குப் பிறகு அந்த மடாலயத்தில் அடுத்ததாக எவருக்கு தலைமைப் பொறுப்பு எடுத்து நடத்தும் தகுதி உள்ளது என்ற குழப்பம் ஏற்பட்டது. அனைத்து சீடர்களும் இதை குருவிடமே கேட்டனர். குரு படுக்கையில் இருந்துகொண்டே ஒவ்வொரு சீடரையும் உற்றுநோக்கினார். இறுதியாக ஒரு சீடனைப் பார்த்து கை நீட்டிக் காட்டிவிட்டு இறந்துவிட்டார்.

மற்ற சீடர்களுக்கெல்லாம் வருத்தம். குரு சுயநினைவின்றி தவறுதலாக அந்தச் சீடனை சுட்டிக்காட்டிவிட்டாரோ என்று நினைத்தனர்.

இருப்பினும் வேறுவழியின்றி அந்தச் சீடனையே தலைமைக் குருவாக ஏற்றுக்கொண்டனர்.

அதுவரையில் அங்கு இருந்த எல்லா முறைகளும் மாற்றப்பட்டன. "இவர்" அவர் மாதிரி இல்லை என்று சீடர்கள் முணுமுணுக்க ஆரம்பித்தனர். ஆனால் எவரும் அதை அவரிடம் துணிவுடன் சொல்லவில்லை.

வேறொரு குரு அங்கு சில நாட்கள் வந்து தங்கியிருந்தார். அவருக்குப் பழைய குருவையும் நன்கு தெரியும்.

ஒருநாள் மடாலயத்தில் மரத்தடியில் தனியாக அமர்ந்திருந்த புதிய குருவிடம் அவர் தன் சந்தேகத்தை கேட்டார்.

"நீங்கள் பழைய குரு மாதிரி இல்லையே?"

"யார் சொன்னது அப்படி?"

"பலர் அப்படிப் பேசிக்கொள்கிறார்கள்."

புதிய குரு மௌனமானார்.

புதிய குருவிடம் வந்தவர் கேட்டார். "உங்களது மௌனத்தின் அர்த்தம் புரிகிறது. வெறும் வதந்திகளுக்குப் பதிலளிக்க வேண்டியது அவசியம் இல்லைதான். என்றாலும் என் சந்தேகம் என்னவென்றால் நீங்கள் பழைய குரு போன்றவர்தானா?"

"ஆமாம்."

"எப்படிச் சொல்கிறீர்கள்?"

"அவர் யாரையும் பின்பற்றியதில்லை. சுய ஒளி போல செயல்பட்டார். நானும் யாரையும் பின்பற்றுவதில்லை"

வந்தவர் மௌனமானார்.

"ஞானத்தைப் புரிந்துகொண்டவன் சுய ஒளியாகவே செயல்படுவான் யாரையும் பிரதிபலிக்க வேண்டிய அவசியம் அவனுக்கு இல்லை."



ஜென் கதை "சுய ஒளி"

**Book packet** containing printed books

*If undelivered please return to:*




Sri Bagavath Mission

31, Ramalingasamy Street, Ammapet,
Salem - 636 003. Tamilnadu,INDIA.

**V. A. P. Sharavanan : 99942 05880**
**Dr. N. Kailasam : 94432 90559**
**K. S. Jeevamani : 97891 65555**

www.pravaagam.org, www.sribagavath.org
E-mail : sribagavathmission@gmail.com

*To*

Published by Shri. V. A. P. Sharavanan on behalf of the Sri Bagavath Mission, 31, Ramalingasamy Street, Ammapet, Salem-636 003. Tamilnadu, India. Printed by Sri Jayavel Press, Gandhi Maidanam, Ammapet, Salem-636 003. Editor : Shri. K. S. Jeevamani, Cell : 97891-65555.